


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
31st year
of Publication

24—4—1966

## தமிழர் தலைதூக்க!

—மனசை. ப. கீரன், பி. ஏ., பி. டி.

'தூநந்தவையே தழைக்கும்' என்பது இயற்கையின் விதி. இயற்கையுடன் பொருந்த ஒத்து இயைந்துள்ள உயிர்களே அழியாமல் இருக்கும், என்பது இதன் பொருள். அதனால்தான் குச்சிப் பூச்சி, இலைப்பூச்சி போன்றவை குச்சி, இலைகளில் இருப்பதற்கு ஏற்பக் குச்சியைப் போலவும் இலையைப் போலவுமே இருக்கின்றன. பசு மரங்களில் உள்ள பச்சைப் பாம்பும், புதர் காடுகளில் வாழும் புலியும், பாறைகளில் உள்ள தேரையும் பிறவும் நிறத்தைச் சூழ்நிலைக்கேற்பப் பெற்றுள்ளன, உயிரினங்களின் உறுப்புக்களும் உண்ணும் உணவுக்கும் செய்யும் செயலுக்கும்ஏற்ப அமைந்து இயற்கையை எதிர்த்து நின்று வாழ்கின்றன. அவ்வாறே தமிழர் தொன்னாளில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நிலங்களுக்கேற்ப ஒழுங்கங்களை அமைத்து இலக்கியங்களை இயற்றினர். இயற்கையோடு இயைந்த இலக்கியங்கள் இன்றும் இனிமை குன்றாமல் வாழ்கின்றன. நாமும் உலகில் வாழ்ந்து தலைதூக்க இயற்கையுடன் பொருந்திய வாழ்வு வாழ்தல் வேண்டும். அவ்வாறு நாம் எத்துறைகளில் எண்ணம் செலுத்துதல் வேண்டும், என நினைவுபடுத்துக் கொள்ளுதல் நலம்பயக்கும்.

சங்ககால இலக்கியங்களின் தன்மையை நோக்கினால் பொய்ப் புனைந்துரைகளுக்கு இடமில்லை. புராணக் கண்மூடி நம்பிக்கைகள் போற்றப்படவில்லை. உண்மைகளே கண்ணெனப் போற்றினர். இந்நாளில் கவிதைத்துறை மட்டுமன்றி உரைநடையும், புதினங்களும் பற்பல அறிவியற் துறைகளும் மலர்ந்து வருகின்றன. இந்நிலையில் நம்மைச் சூழ்ந்துள்ள சமுதாயத்துடன் இலக்கியங்களும் இயைந்ததாய் வளர்தல் வேண்டும். மேற்கு ஜெர்மனியில் டெலிவிஷன்களில் இந்தியாவில் கேரள உணவுக் குழப்பம், வங்காள உணவுப் பற்றுக் குறைக் கலவரங்கள் போன்றவையும் உடனுக்குடன் காட்டினார்களாம்! ஜெர்மனியர்கள் தங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதை அறியும் ஆர்வமும் ஆற்றலும் உள்ளவர்களாய் உள்ளனர், என்று குறிப்பிடப்பட்டது இங்கே ஒத்துக் காணலாம். நம் இலக்கியங்களும் அறிவுக்கு எட்டாதவைகளை எடுத்தியம்ப முனைவதை விட்டுச் சுற்றுச் சூழ்ந்துள்ளவைகளைத் தெளிவுபடுத்தி அவற்றை ஆளும் தகுதியை வளர்ப்பனவாக இருத்தல் வேண்டும்.

பண்டைய இலக்கியப் படைப்பாளர்களை நோக்கினால் வேறொரு உண்மையும் ஒளிபெறுகின்றது. கூலவாணிகன் சாத்தனார், மருத்துவம் தாமோதரனார், பாண்டியன் அறிவுடை நம்பி போன்ற பெயர்கள் பல தொழில் புரிந்து புலமையும் பொலிந்த நிலையை உணர்த்துகின்றன. நாமும் பற்பல தொழில் வளங்களையும் பெருக்கிக்கொண்டு புலமைப் பொலிவால் பலகலையும் பைந்தமிழில் தழைக்கச் செய்தல் வேண்டும். இளங்கோ அடிகள் சிலம்பின் வழக்கை புனைந்துரைக்கும் நிலையில், கானவர் காவலர்க்கு வழங்கும் காடுபடு பொருள்களெனத் தருகிற பட்டியல் அவரை ஓர் தாவர இயல் வல்லுநராகக் காட்டுகிறது. மணிமேகலையில் நவமணிகளின் சிறப்பும், அவற்றில் குறைகளும் பிறவும் கூறும் வகையில் கூலவாணிகனார் நவமணி நாயகராகவும் திகழ்கின்றார். கம்பர் பற்பல உண்மைகளையும் சொல்லும் முறையிலும் உறுதிப்படுத்தும் வகையிலும் வழக்கறிஞரோ என வியக்கத் தோன்றுகிறது; நண்பர் ஒருவர் அடிக்கடி குறிப்பிடுவதுபோல, தத்துவ இயல் 'அறிவியல்களின் அறிவியல்' (Science of Sciences) என்பாற் போல, இலக்கியப் படைப்பாளர்கள் பல்கலைக் குரிசில்களாக விளங்குதல் வேண்டும்.

'சாதிகள் இரண்டொழிய வேறில்லை' என்று ஆண் சாதி, பெண் சாதி என்றுதான் வேற்றுமை காட்டலாமே யொழிய வேறு சாதிகளாக வேற்றுமை காட்ட இயலாது என்றனர். ஆனால் அந்த 'ஆண் சாதி—பெண் சாதி' பிரிவிலும் வேற்றுமையில்லை; இருவருமே சமம் என்று இந்நாளில் போற்றுகிறோம். 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதியார் முளையிலேயே சாதியின்மையாகிய உரத்தைப் பாப்பாவுக்கு ஊட்டுகிறார். ஆங்கிலேயர், 'நாங்கள் சட்டத்தின் ஆட்சியை நம்புகிறோம்; சட்டத்தின் முன் எல்லோரும் சமம்' என்கின்றனர். இவ்வாறு இந்நாளில் யாவரும் சமம் என்னும் குடியாட்சியே மக்கள் சமுதாயத்தின் மூலமந்திரமாக உள்ளது. ஆப்ரகாம் லிங்கனும் 'மக்களால் மக்கட்காகவே நடத்தப்படும் மக்களது ஆட்சியே குடியாட்சி' என்று முழங்கினார். பிரஞ்சுப் புரட்சி எழுத்தாளரும் 'சமத்துவம் — சகோரத்துவம்' ஆகிய பல்லவிகளைப் பாடவைத்து மன்னனை இறைவன் நிலையிலிருந்து இறக்கிவிட்டு மக்களாட்சியை நிறுவினர். தனிப்பட்ட முறையில் ஓரிருவ சேர்ந்து பேசும்போது மேடைகளில் பேசும்பே தும், எங்கும் 'சமம், சமம்' என்னும் கருத்தே எதிரொலி செய்கின்றது.

ஆனால் சமூகத்தில் எத்தனைப் பிளவுகள்! எவ்வளவு உயர்வு தாழ்வுப் படி அமைப்புக்கள்! வடகலை—

[—7ம் பக்கம் பார்க்கவும்]

# கோடிக்கரைவரை ...

— பரதேசி.

[சென்றவாரத் தொடர்ச்சி]

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்பார்கள். தஞ்சை மாவட்டத்துக்கு நெல்லுக்காக நன்றி செலுத்த மறந்தாலும் உப்புக்காக (ஒப்புக்காக அல்ல) நன்றி செலுத்தியே தீர வேண்டும். வேதாரணியம் ரயில்வே ஸ்டேஷனை நோக்கி ஓடும் நான் வழியில் நல்ல கவர்ச்சியுடன் குறுக்கிட்ட பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தினுள் நுழைந்து வரைபடம் ஒன்று கோரினேன். அலுவல் முடிந்து வீடு செல்லும் நேரத்திலும் வெளியூரிலிருந்து வரும் 'ஊர் சுற்றி' என்று ஊழியர் ஒருவர் தேடிக் கண்டுபிடித்து நான் கோரிய வரை படத்தை வழங்கினார்.—இது ரொம்பச் சிறிது என்று அவர் கூறினாலும் அதன் உதவி எனக்குப் பெரிதாகவே இருந்தது. வேதாரண்யம் பகுதியிலிருந்து உப்பு—புகையிலை புகையிலைக் காம்பு—சவுக்கு விறகு—அவைகளின் அடிவேரைக் கெல்லித் தயாரிக்கும் கரி—யாவுமே ஏற்றுமதிப் பொருளாக இருக்கின்றன. வேதாரண்யத்திலிருந்து கோடியக்கரை வரையிலுள்ள பகுதிகளில் அகஸ்தியம் பள்ளியில் உப்பு அதிகமாகவும்—கோடிக்காடு தாண்டி—கோடியக்கரைப் பகுதியில் புகையிலைத் தோட்டம் அதிகமாகவும்தென்பட்டது. மேட்டூர் கெமிகல் ஸ்தாபனத்தாரும்—சிவகாசி 'விம்கோ' ஸ்தாபனத்தாரும் பெருவாரியான உப்பளப் பகுதிக்கு உரிமையாளரென்றும் அவைகளிலும் புகையிலைத் தோட்டங்களிலும் ஏராளமான தொழிலாளர் பணிபுரிவதாகவும் அறிந்தேன்—நான் வெறும் உல்லாஸ யாத்திரை நோக்கில் சென்றதால் இது பற்றி அதிகம் கவனம் செலுத்தவில்லை.

வேதாரணியத்தில் வேதபுரீஸ்வரர் கோயிலை அடுத்தாற் போன்ற பிரபல-பல சரக்கு வர்த்தகர்—திரு. வீ. என். வேதநாயகம் பிள்ளையவர்களிடமிருந்து கோடியக்கரை என்னும் கேட்பாரற்ற பகுதியில் இரவைக் கழிக்க—ரயில்வே-ஸ்டேஷன் மாஸ்டருக்கு சிபாரிசுக்கடிதம் ஒன்று என் வசம்—வலுவில் உதவியது—இருந்தது—ஆனால் அதைப் பயன்படுத்துவதை நேர்மைக் குறைவாக நான் கருதி ரொம்பவும் பழக்கமுள்ளவனைப்போலவே ரயில் நின்றதும் இறங்கி வெளியே சென்றேன்—எங்கே சென்றாலும் எனக்குப் பழக்கமான பள்ளிச் சிறுவர்களின் துணையில் ஊருக்குள் சென்று யாராவதொரு ஆசிரியன் உதவியில் தங்கியிருக்க முடிவு செய்தபோது வழியில் புகையிலைக் கம்பெனியொன்றில் எனக்குப் புகலிடம் கிடைத்தது. உயர்திரு காசி வேதரத்தினம் பிள்ளையவர்கள் உரிமையுடன் என்னை வரவேற்று உபசரிக்க விரும்பினார்—ஆனால் அங்கே உணவு விடுதி ஏதுமில்லை—குடிநீர் வசதிகூடக் குறைவுதான்—சோடாவையும்—வெற்றிலை பாக்கையும்—கைவசமிருந்த நிலக்கடலையையும் உணவாக மாற்றிக்கொண்டேன்—திட்டமேதுமில்லாமல் எங்கோ ரோடு போட்டு வந்து திடீரென்று அங்கே அது முடிந்துவிட்டதோ—அல்லது-நெடுந்தூரம் செல்லும் பாதையைத் திடீரென்று கடல் விழுங்கி விட்டதோ என்று எண்ணினேன். என்னை நானே அறிமுகம் செய்துகொண்டு ஊர் மக்களின் நலன் பற்றி விசாரிக்கும்போது—வேதாரண்யம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த கோடியக்கரை அபிவிருத்திக்குப் பாடுபட வேண்டியது நிறைய பாக்கி விழுந்திருப்பதாக அறிந்தேன்—கோடிக்காடு—கோடியக்கரை—எனும் இரு சம பகுதிகளுக்குமிணைப்பாக உயர்நிலைப் பள்ளி ஒன்று அமையவேண்டும். குடிநீர்ப் பிரச்னையைத் தீர்க்க மேல்மட்டத்தொட்டி ஒன்றைக் கோடியக்கரையில் அமைத்து நல்ல குடிதண்ணீர் வசதியுள்ள புகையிலைத் தோட்டம் எதிலிருந்தாவது குழாய் மூலம் குடிதண்ணீர் வசதி செய்துதர வேண்டும். 'எல்லாவற்றையும் என்னிடம் கொடுங்கள்—நான் மற்றவர்களுக்கும் கொடுத்து நானும் எடுத்துக் கொள்கிறேன்' என்று சிலர் குழந்தைகளுக்கான அன்பளிப்பையும் தாமே பெற்று மகிழ்வது உண்டு. இந்த மனப்பான்மை வளர்ச்சியடைந்த-சமீபத்தில் கல்லூரியே வேண்டுமென்று குரல் கொடுக்கும்—வேதாரண்யத்திற்கு இருக்குமானால் அது மன்னிக்கப்படவேண்டிய-மறுத்துரைக்க வேண்டிய-அபிலாஷைதான்!

---

எம்போன்ற 'ஊர் சுற்றி'களின் நலனைக் கருதியும் அயல் நாட்டு யாத்திரிகர்களின் பொருள் வசதியைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியும் கோடியக்கரையில்-பக்கா கட்டிடம் வேண்டாமே!—சாதாரணமாகவாவது பிரயாணிகள் தங்கும் விடுதியை அமைத்து அதையொட்டி ஒரு உணவு விடுதியும் இயங்க வகை செய்யலாம்!

*

நள்ளிரவிலும் நடுப்பகலிலும் ஒரு மணிக்குமேல் கண் விழிக்கும் கெட்ட (?) பழக்கம் என்னை எங்கு சென்றாலும் விடுவதில்லை. பகலில் இடைவேளைச் சிற்றுண்டி நேரம்—இரவில் முழுவேகப் படிப்பு—எழுத்துநேரம்—கோடியக்கரையில் புகையிலைக் கம்பெனிப் பிள்ளையவர்கள் உள்ளே படுத்திருக்க வசதி செய்தும் நான் இதே காரணத்தால் வெளியே திண்ணையில் பெஞ்சியில் படுத்தேன்—கண்விழித்தபோது மெழுகுவர்த்தியைக் கொளுத்தி என் வேலையைத் துவங்கினேன். எங்கோ ஜாமக்கோழி கூவிற்று. கிழக்கே வெள்ளி பூவைத்தது—அருகிலுள்ள கைகாட்டி மரம்—மான் வளர்ப்புக்காடு—கலங்கரை விளக்கம் செல்ல வழி காட்டிற்று. சுமார் 4 மணி வரை பொறுத்திருந்து பிறகு உள்ளே கண்ணுறங்கும் பிள்ளையவர்களின் தம்பியவர்களை எழுப்பி விடை பெற்றேன்.

'இந்த நேரத்திலா?...... தன்னந்தனியாகவா?' என்ற அவர் பரிவுரையை அதனாலென்ன!... எனக்குப் பயமில்லை என்று மெள்ள ஒதுக்கிப் புறப்பட்டேன். 'நகரமானால் நகரக்கூட மறுப்போம்—காபி குடிக்காமல்-சிற்றுண்டியருந்தாமல்—கடைசிபட்சம் சிங்கிள் 'டீ' குடிக்காமல்—இரவு நேரம் முழுதும் மினுமினுக்கும் மின்சார விடிவிளக்குப் போல் ஒளி சிந்தும் வெள்ளி எனக்கு வழிகாட்டிற்று?... இயற்கையாலோ இறைவனருளாலோ விரிந்து சுருங்கும் வல்லமை படைத்த விண் மீன்களின் கண் வீச்சுத்தான் என் கை பிடித்து அழைத்துச் சென்றதோ—திடீர் திடீரென்று எதிரில் ஏதோ ஆறு குறுக்கிடுவதுபோல் பிரமையூட்டியும்—திடீர் பிரேக்போட்டு நிறுத்தும் நிலையில் எதிரில் புதர் செடிகளைக் கொண்டு வழி மறித்தும் இயற்கை விளையாடிற்று—தூரத்தில் கண்ணை மூடி மூடித் திறக்கும் கலங்கரை விளக்கத்தின் வெளிச்சத்தைப் பற்றுக் கோடாக்கிக்கொண்டு நடந்தேன். ஒரு விதத்தில் இந்த அசட்டுத்துணிவு

[6-ம் பக்கம் பார்க்க]

# காலமும் வந்துவிட்டதே ...

— பாவை. நடராசன்

மனிதன், எதைச் சிந்திக்கிறானே அது ஒளிபெறுகிறது; அவனும் ஒளி பெறுகிறான். சிந்தனை, புழுதி படிந்திருக்கின்ற கண்ணாடியைத் துடைப்பது போன்றது. நாளும் அதைத் துடைத்து, நங்கை முகம் அதில்பார்த்து, தலைவாரி பூச்சூடித் தன்னை அழகு படுத்திக் கொள்வது போல், ஒவ்வொருவரும் சிந்திப்பதனால் தன்னை அழகு படுத்திக்கொள்ள முடியும்; தன் நாட்டையும் அழகு படுத்திக் கொள்ள முடியும்.

காரல் மார்க்சு சிந்தித்தான். தன்னை அழகு படுத்திக்கொள்ளவா? இல்லை! இல்லை!! தன் நாட்டை அழகு படுத்திக் கொள்ள நாட்டு மக்களின் துன்ப வாழ்க்கையினை எண்ணி, எண்ணி அவன் ஏங்கினான்; இரங்கினான். ஏற்ற தொரு வழிகாணச் செயலில் இறங்கினான், பலர் போற்றும்படியான சமுதாயத்தை உருவாக்க உழைத்தான்; உழைத்து, உழைத்து 'மூலதனம்' என்னும் நூலை எழுதிக் கொடுத்தான்; புழுதி படிந்த மனித வாழ்வைத் துடைத்து, பொலிவு படரச் செய்தான். இன்று அந்த நாடு நலிவின்றி வாழ்கிறது.

அமெரிக்காவில் அடிமை விலங்கு பூண்டு, காடு மேடுகளில் மாடுபோல் உழைத்தார்கள், நீக்ரோ மக்கள். உருக்குலைந்து, வாடிய பயிர் போல் உணர்விழந்து கிடந்தார்கள். "மனிதனுக்குமனிதன் அடிமையா? என்ன இது மடமை? இதை ஒழிப்பது என் முதற் கடமை" என ஆர்த்தெழுந்தான், ஆப்ரஹாம்லிங்கன்; அடிமை விலங்கை உடைத்தெறிந்தான். அவன்பின்னே வந்தவர்கள் அந்தநாட்டை –அமெரிக்க நாட்டைக் குடியரசு நாடாகக்கொடி கட்டிப் பறக்கச் செய்தார்கள். அது இன்று பல நாட்டிற்கு வழிகாட்டியாக நிற்கிறது; வாழ்வுக்கு வளமூட்ட பொருள் கொடுத்து உதவுகிறது.

உருசியாவைப் போல் அமெரிக்காவைப் போல் ஐரோப்பிய நாடுகளையும் எண்ணிப்பாருங்கள். அங்குச் சிந்தனைச் சுடர் உண்டு. அதை வந்தனை கூறி வரவேற்று பல நாடு போற்றச் செயல்படுவார்கள்; நாட்டை அழகு படுத்துவார்கள். நாமும் அப்படி சிந்தனையால் –சிறந்த செயல்சாதனையால் நாட்டை அழகு படுத்த வேண்டாமா? வேண்டும்! வேண்டும்!! முனைந்து செயல்படவேண்டும். வினை, முற்ற முழுக்க செய்து, நாட்டைப் புதுப்பிக்கவேண்டும்.

நேரு பெருமகனார் உள்ளம், இந்த நாட்டு மக்கள் வாழும் இல்லம். அந்த உள்ளத்திலிருந்துதான் குடியாட்சி சமத்துவம் முகிழ்த்தது. அது மலர்ந்து மணம் பரப்பவேண்டிய காலமும் வந்து விட்டது. அதற்குள் அதனைப் பறிக்கப்பலர் துடிக்கிறார்கள்; இதழைக் கிள்ளி எரிய சிலர் துள்ளி நிற்கிறார்கள். ஆனால், தொண்டருக்கும் தொண்டு செய்யும் திரு. காமராசு அவர்கள் கண்ணும் கருத்துமாய்க் காத்து வருகின்றார்; காலத்தில் பூத்து மணக்கத்தான் போகிறது, அது. அதைப் பலர் பார்த்து மகிழத்தான் போகிறார்கள். அந்தக் காலமும் வந்து விட்டதே!

உந்து வண்டி நிலையத்தில், பேருந்து வந்து விட்டது போல், காலமும் வந்து விட்டது. காத்திருந்த நாம் ஏறி அமர வேண்டாமா? அப்பொழுதும் வாளாக இருப்பவன் ஆளாக இருக்க முடியாது. அவன் ஆமையாக இருப்பான்; பேச வாயற்ற ஊமையாக இருப்பான்; சாயும்பக்கமே சாயும் ஆடாக இருப்பான்; கண்ணற்ற குருடனாக இருப்பான். அவனால் சான்றோர்தம் கருத்தை ஏற்க முடியாது. ஏற்றுச் செயல்படுத்த முனைந்தால், அவனையும் அவன் நாட்டையும் அவன் அழகுபடுத்திக்கொள்ள முடியும்.

சான்றோரின் பேச்சு, காய்கதிர் ஒளி வீச்சு. அதை எத்தனை முகிற்கூட்டங்கள் தடை போட்டாலும், அத்தனையையும் கிழித்தெறிந்து விட்டு கதிர், ஒளி பாய்ச்சும்; சான்றோர் கருத்து, வினை ஓச்சும். இதனை பண்டாரகர் மு. வரதராசன் அவர்கள் 'பொதுத்தொண்டு ஆற்றும் சான்றோரின் தூய உள்ளத்திலிருந்து எழும் கருத்து என்றேனும் உண்மைப் பயன் விளைந்தே தீரும் என்று உறுதியாக நம்பிக்கை கொள்வோம்' எனக் கூறுவதிலிருந்தும் தெளிவாக உணரலாம். பண்டிதநேரு அவர்கள், இந்த நாட்டிற்கே தொண்டு செய்த சான்றோர்; தூய எண்ணமிக்க தாய் உள்ளம் உடையவர். பேராயக் கட்சித்தலைவர் திரு. காமராசு அவர்கள் இந்த நாட்டிற்கு தன் உடலை, உயிரை, உணர்வை ஒப்படைத்தவர்; ஒப்பற்ற தொண்டர். இப்படிச் சான்றாண்மை மிக்கச் சான்றோராய், மக்கட் தொண்டராய், தூய உளத்தினராய் உள்ள நேரு சொன்ன இலட்சியத்தைக் காமராசர் செயல்படுத்துகிறார் என்றால் எப்படி அது தோல்வி உறும்?

பாரதி அன்று கண்ட கனவு, இன்று நனவாகிக் கொண்டிருக்கிறது நாமு... கண்ணாரக் கண்டுகொண்டிருக்கிறோம். நாம் சுத... திரம் வாங்குவதற்கு முன்னே 'எங்கும் சுதந்திர... என்பதே பேச்சு' என்று பாடினான், பாரதி. அ... படியே இன்று எல்லோரு... சுதந்திரப் பேச்சுத்தா... பேசுகிறார்கள். சுதந்தி... மாகக் கட்சி நடத்துகிறா... கள். அதற்கு அடுத்த அ... யில் 'நாம், எல்லோரும் ச... மென்பது உறுதியாச்சு... என்று பாடினான். அதுதா... இன்று குடியாட்சி சமத்... வக் கொள்கை மூலமா... நனவாக வந்துகொண்டிரு... கிறது.

'சித்திரை வந்து வி... டது. தரை உழுது, தக்... பயிர் விளைவிக்க வேண்டும்... என உழவர்கள் செயலி... முனைகிறார்கள். அ... போலவே, நாம் எல்லோரும் சமம் என்னும் வித்தை விதைக்கின்ற காலம் நமக்கு வந்து விட்டது. சிந்தனையால் உழுது, செயலால் நீ... பாய்ச்ச வேண்டும். வி... தினை ஊன்றி பாதுகாக்... வேண்டும். காலம் தவ... னால் யாவும் தவறிவிடும். எனவே, விழித்தெழுந்... வினையாற்ற துடித்து வ...

[4-ம் பக்கம் பார்க்க]





| | | |
|---|---|---|
| ஓலை : 31 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1966 |
| இதழ் : 22 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஏப்ரல் : 24 |


# மலேசிய - தமிழ் அரங்கு

உலகம்முழுதுமுள்ள தமிழ்ப் பற்றுக்கொண்டவர்களின் கருத்தரங்கு ஒன்று மலேசியாவில் நடைபெற்று முடிந்தது. மலேசிய அரசாங்கம் இதில் காட்டிய ஊக்கம் பாராட்டத் தக்கது. அங்கு தேசிய மொழி மலேயா. சட்ட மன்றத்தில் மலேயாவும் ஆங்கிலமும் பயன்படுகின்றன. சீனம், தமிழ், ஆங்கிலம், மலேயா நான்கும் நடைமுறை அரசாங்கக் காரியங்களில் உரிய இடம் பெற்றுள்ளன. இந்த ஏற்பாட்டில் மலேசிய மக்களின் சகிப்புத் தன்மையும், சிறப்பும் வெளியாவதாக நமது முதலமைச்சர் கூறியுள்ள பாராட்டுரை மிகவும் சரியானது. நமது நாட்டிலும் மொழிபற்றிய எண்ணங்களில் இவ்வளவு தெளிவும் சகிப்புத் தன்மையும் தேவை என்பதையே முதலமைச்சரின் கருத்து வலியுறுத்துகிறது.

அங்கும் தி. க. தி. மு. க. தமிழரசு என்று கட்சிகள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், தமிழ்நாடு என்று மலேசியாவை அங்குள்ள தமிழர் எண்ணிக்கொண்டு இங்குள்ள கட்சிகளின் கிளைகள் போல அவை செயல்படக் கூடாதென்றும் முதலமைச்சர் குறிப்பிட்டுள்ளது நேர்மையான அறிவுரையாகும். மீண்டும் தமிழகத்துக்கு சென்று குடியேறவேண்டுமென்ற எண்ணத்துடன் மலேசியா தமிழ் மக்கள் இருக்கக் கூடாதென்று நெடுஞ்செழியன் கூறியுள்ள புத்திமதியும் மதிப்புக்குரியது.

இலங்கையில் எண்ணற்ற தமிழர் குடியுரிமையற்றுத் தவிக்கநேர்ந்த காரணமே அவர்கள் தங்கள் தாயகமாக இலங்கையை நம்பியிராமல் தமிழ் நாட்டுக்குத் தங்கள் செல்வச் சேமிப்புக்களைக் கொண்டு சென்று வாழ வேண்டுமென்ற நோக்குடன் அன்னியர் போன்ற வாழ்க்கையை நடத்திவந்ததுதான். ஆங்கிலேயர் சென்ற சென்ற நாடுகளில் குடியேறி அந்தந்த நாட்டவர்களாகவே மாறிவிட்ட வரலாற்று உண்மையை நெடுஞ்செழியன் எடுத்துக் காட்டியிருக்கிறார். மொழி ஒற்றுமையை அதனால் அவர்கள் இழந்துவிடவில்லை யென்பதையும் குறிப்பிட்டுள்ளார். பலப்பல நாடுகளிலும் சென்று தொழில் புரிந்து வாழும் தமிழ் மக்கள் இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

நடைபெற்ற கருத்தரங்கில் ஆங்கிலம் பெரிதும் பயன்படுத்தப்பட்டதுபற்றி இங்கிருந்து சென்ற தமிழரசுத் தலைவர் தமது ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் வெளியிட்டிருக்கிறார். இதுபோன்ற அகில உலகக் கருத்தரங்குகளில் ஆங்கிலம் ஒன்றே பற்பல நாட்டைச் சேர்ந்தவர்களும்கலந்துகொண்டு தங்கள் தமிழ் ஆர்வத்தையும்ஆற்றலையும்வெளியிடவாய்ப்பாகுமென்றும் தமிழ் மட்டுமே இருக்க வேண்டுமென்று வற்புறுத்துவது அவசியமில்லையென்றும், இந்த அரங்கிற் கலந்து கொண்ட பாரதியாரின் பேத்திவிஜயாபாரதி மலேசிய வானொலிப் பேச்சில் குறிப்பிட்டார் என்று அறிகிறோம்.

பொதுவில் மலேசிய தமிழ்க் கருத்தரங்கு நல்லதொரு நிகழ்ச்சி என்பதில் நமக்குப் பெருமையும் மகிழ்வும் உண்டு.

டில்லியில்

## திருநாவுக்கரசர் விழா

தற்கால வாழ்வில் மனிதன் கண்ட முன்னேற்றம் எந்த நற்காரியத்திற்கும் நேரமில்லை என்று பாடும் பல்லவியேயாகும். மக்கள் உய்வதற்காகவாழ்வில் எந்த வழிகளைக் காட்டினாலும் மனிதன் எங்கே இதற்கெல்லாம் நேரமிருக்கிறது என்று கேட்கத் தொடங்கியிருக்கிறான். இதனால் சமூகத் தொண்டும் சமயநெறி நிற்றலும் மறக்கப்பட்டு வருகிறது. அந்நிலைமை மாற சைவசமயப் பேருளாளரான திருநாவுக்கரசுசுவாமிகள் போன்றார் வரலாறுகளை நினைவூட்டிக் கொள்வது சாலச்சிறந்ததாகும்.' என்று பாராளுமன்ற உறுப்பினரும் சைவசித்தாந்தப் பேரறிஞருமான காசிநாததுரை டில்லியில்16—4—66அன்று நடைபெற்ற திருநாவுக்கரசர் விழாவிற்குத் தலைமை வகித்துப்பேசுகையில் குறிப்பிட்டார்.

டில்லியில் தமிழர்கள் நிறைந்திருக்கும் கரோல் பாக் பகுதியில் சைவப்பேரவையின் சார்பில் இவ்விழா நடைபெற்றது. அரசு அலுவலர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், தமிழ்ப் பிரமுகர்கள், பெண்கள் மற்றும் பலர் பெருந்திரளாக வந்திருந்தனர். ஆரம்பத்தில் எம். எஸ். பி. சண்முகம் யாவரையும் வரவேற்றுத் திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாற்றைச் சுருக்கமாக எடுத்துக்கூறினார். குமரகுருபர சுவாமிகள் நூல் நிலைய வெளியீடாக திருநாவுக்கரசு சுவாமிகளது வரலாற்றுச் சிறுதாளும்யாவர்க்கும்வழங்கப்பெற்றது. புதுடில்லி தீயணைப்புப் படைத் தலைமை அதிகாரி சிங்கார சுந்தரமும் பேபி ஜெயலட்சுமியும் தேவாரம் பாடினார்கள்.

——

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

வேண்டும். இந்த மகத்தான வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, நம் நாட்டை அழகுபடுத்த வேண்டும்.

இத்தாலி நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட கவிஞன், மாசினி (Mazzini). அவன் அந்த நாட்டு மக்களைத் தட்டிக்கொடுத்து, 'எழுமின் எழுமின்! இன்றே எழுமின்! நாளை தடைகள் மிகுந்துவிடும் (Rise oh rise! Rise today. To-morrow the obstacles will be greater) என்று குரல் கொடுத்தான்; நாட்டிற்கு விடுதலை வாங்கிக் கொடுத்தான். இன்று திரு காமராசு அவர்களும் அப்படித்தான் இந்த நாட்டு மக்களைத் தட்டி எழுப்புகின்றார். தக்கதொரு சமுதாயத்தை உருவாக்க மடிகட்டி நிற்கின்றார்.

இந்தப் பாரத பூமியிலே, 'குடியாட்சிச் சமத்துவம்' என்னும் பயிரினை நட வேண்டும்; உயிரினைக் கொடுத்தேனும் அதைப் பாதுகாத்து வளர்க்கவேண்டும். நம்முடைய நண்பர்களும், நல்ல தலைவர்களும், நாட்டு மக்களும் அக்கொள்கையைப் பயிராக்க வேண்டும். மக்கள் நலம் பெற்று நாடு வளம் பெற்று வளர்ந்தாக வேண்டும்.

'எல்லோரும் ஒன்றென்னும்காலம் வந்ததே-பொய்யும் ஏமாற்றும் தொலைகின்ற காலம் வந்ததே' என்று பாரதி கண்ட கனவு நனவாகும் காலமும் வந்துவிட்டது. கால் எடுத்து வையுங்கள்; நாளில் செயல் செய்யுங்கள்...நாம் எல்லோரும் சமம் என்னும் காலமும் வந்துவிட்டதே. அதனால், நாம் அந்தக்காலத்தை மலர்விக்க வேண்டும்; ஞாலத்தில் அனைவரையும் மகிழ்விக்க வேண்டும்.

——

தென் ஆப்பிரிக்காவில்

# நிர்வாகமும் நீதியும்

தென் ஆப்பிரிக்காவில் வெர்வோர்டு நிர்வாகத்தில் 1963-64 ஆம் ஆண்டில் நெல்ஸன் மண்டேலா என்ற பெயர் கொண்ட தேசீயத் தலைவர் அராஜகச் செயல்களில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு நீதி மன்றத்தில் விசாரணைக்குள்ளாக்கப்பட்டதும், நாடு கடத்தப்பட்டதும் அறிந்ததே. அந்நாட்களில் இவருக்கு நீதி மன்றத்தில் ஏப்ரஹாம் ஃபிஷர் என்ற பிரிட்டிஷ் வழக்கறிஞர் இவர் தரப்பில் நீதிபதிகள் முன்பு கடுமையாக விவாதித்தார். அவ்வழக்கறிஞர் இன்று சதிவேலைகளில் பங்கு கொண்டதாகவும், நிர்வாகத்திற்கு எதிராக நாச வேலைகளில் ஈடுபட்டதாகவும் குற்றம் சாட்டப்பட்டு நீதி விசாரணைக்குள்ளாக்கப்பட்டுள்ளார். மண்டேலா வழக்கில் பங்கு கொண்டதை நிர்வாகத்திற்கு எதிர்ப்புக் காட்டுவதாக அர்த்தம் கொண்டு, ஃபிஷரைப் பழிக்குப் பழி வாங்குவதற்காக மேற் கூறப்பட்ட குற்றச் சாட்டுகளை அவர் மீது வெர்வோர்டு அரசாங்கம் சுமத்தியுள்ளது, என்று ஊகிக்கப்படுகிறது.

இத்தகைய வழக்கு விசாரணைகளும் குற்றச் சாட்டுகளும் தென் ஆப்பிரிக்காவில் இன்று சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகள் என்று கூறின் மிகையல்ல. நீதி மன்றத்தில் வழக்கை நடத்திவைக்கும் அதிகாரி, ''தென் ஆப்பிரிக்காவில் கம்யூனிஸ்டுகளால் ஊக்குவிக்கப்படும் நாசகாரிகளுக்கு நீதி மன்றத்தில் ஆதரவு அளிக்க மூன்று கௌரவமான சர்வதேச ஸ்தாபனங்களின் மூலம் அந்நிய நாடுகளிலிருந்து பண உதவி அளிக்கப்படுகிறது''. என்று கூறினார்.

ஏப்ரஹாம் ஃபிஷருக்கு எதிராக நடக்கப் போகும் நீதி விசாரணையில் உலக நாடுகள் யாவும் சிரத்தை கொண்டுள்ளன. வழக்கு விசாரணையின் மூலம் வெர்வோர்டு நிர்வாகத்தின் கை ஓங்கினால், அதை ஓர் பெரிய வெற்றி என்று நிர்வாகம் பறை சாற்றும்.

நீக்ரோ மக்கள் மீதும், வெள்ளையரல்லாத மக்கள் மீதும் சாற்றப்பட்ட அரசியல் குற்றங்களுக்கு நீதி மன்றத்தில் நடைபெறும் விசாரணைகளுக்குப் பொருளுதவி தந்து அவர்களுக்கு ஆதரவளிக்கக் கிறிஸ்துவ செயல் ஸ்தாபனம் ஒன்று இயங்குகிறது. இந்த ஸ்தாபனத்தின் கொள்கைக்கு நாட்டு நிர்வாகம் எதிர்ப்புக் காட்டுவதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. இயற்கையாகவே இந்த ஸ்தாபனம் நாட்டு எதிர்க்கட்சி அந்தஸ்தையும் பெற்றுக் கொண்டுவிட்டது. இதுவரை அரசியல் குற்றவாளிகளின் ஆதரவுக்காகவும், அவர்களது குடும்ப நிர்வாகத்திற்காகவும் 500,000 பவுன்களை இந்த ஸ்தாபனம் செலவு செய்திருக்கிறது. இதன் கௌரவத்தைக் குறைப்பதற்காக ''பொம்மலாட்டக்காரர்கள்'' என்ற பெயர் கொண்ட ஓர் நூல் அண்மையில் வெளியிடப்பட்டு, இதற்குக் கம்யூனிஸ்டுகளிடமிருந்தும், தீவிர இடது சாரியார்களிடமிருந்தும் பொருளுதவி கிட்டுகிறது என்று அதில் கூறப்பட்டுள்ளது. இந்நூலைப் பிரசுரம் செய்த பிரசுரகர்த்தாக்களின் மீது இந்த ஸ்தாபனம் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டுள்ளதாகத் தெரிய வருகிறது.

1956 ஆம் ஆண்டில் நிர்வாகம் 150 பேர்கள் மீது

அராஜக நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டி வழக்குத் தொடர்ந்தது. இவ்வழக்கு விசாரணை நடைபெற்று முடிவுற நாலரையாண்டுகள் பிடித்தன. குற்றவாளிகள் யாவரும் விடுதலை பெற்றனர். இக்கால அளவுவரை கிறிஸ்துவ செயல் ஸ்தாபனம் வழக்குக்கான செலவுகளையும், குற்றவாளிகளின் குடும்ப ரக்ஷணைக்கான செலவுகளையும் மேற்கொண்டது. 1960 ஆம் ஆண்டில் ஷார்ப்வில் நகரில் போலீஸார்கள் 40 வினடியில் 68 ஆப்ரிக்கர்களைச் சுட்டு வீழ்த்தியதும், 163 பேர்கள் குண்டடிபட்டு பலத்த காயமுற்று சிகிச்சைக் குள்ளானதும் தெரிந்த விஷடம். கிறிஸ்துவ செயல் ஸ்தானம் இந் நடவடிக்கையில் இறந்தவர்களின் குடும்பத்தார்களுக்கு உணவு, உடுப்பு, வாசஸ்தலம் முதலிய உதவிகள் அளிக்க முன் வந்ததல்லாமல் காயம்பட்டவர்கள் மீது நிர்வாகம் தொடுத்த வழக்கை எதிர்க்கப் பெறுத்த அளவு பொருட் செலவும் செய்தது. பின்னர் அரசியல் குற்றவாளிகள் 800 பேர்களுக்கு நீதி மன்றத்தில் உதவியளிக்க ஏராளமாகப் பொருட் செலவையும் அளித்தது.

இச்செயல்ஸ்தாபனத்திற்கு நிதி உதவி உலகில் பல நாடுகளிலிருந்து கிட்டுகிறது. அண்மையில் டட்சு பாராளுமன்றம் 10,000 பவுன்களை இந்த ஸ்தாபனத்திற்கு அளிக்கத் தீர்மானித்துள்ளது. இனவெறிக் கொள்கைகளினல் நிகழும் நீதி மன்ற வழக்கு விசாரணைகளுக்கு வேண்டிய பண உதவியை இந்த மான்யத்திலிருந்து பெற டட்சு பாராளுமன்றம் வழி வகுத்துள்ளது. ஐரோப்பிய நாடுகளிலும், யூ. எஸ்ஸிலும் இச்செயல் ஸ்தாபனத்திற்கு உதவ பல உதவிக் குழுக்கள் இயங்குகின்றன. தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையர்களல்லாதவர்களைக் கொடுமைக் குள்ளாக்கும் சட்டங்களை எதிர்க்க இந்நிதி உதவுகிறது என்பது உலகமறிந்த விஷயம். ஆயினும், வெர்வோர்டு நிர்வாகம் இந்நிதி தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையரல்லாதவர்கள் ஈடுபடும் பலாத்காரச் செயல்களுக்கு உதவுகிறது என்று பிரசாரம் செய்கிறது.

1962 ஆம் ஆண்டில் அமுலுக்கு வந்த ஓர் சட்டத்தின் கீழ் நாகரிக முறைகளில் நிர்வகிக்கப்படும் நாடுகளில் மக்கள் அநீதிகளுக்குத் தங்களது எதிர்ப்புகளைத் தெரிவிக்க எடுத்துக் கொள்ளும் அஹிம்சா முறைகள் தென் ஆப்பிரிக்காவில் நாசகர வேலைகளாகும். இக்குற்றத்திற்கு தண்டனை ஐந்தாண்டு சிறைவாசம். உதாரணமாக, வெள்ளையரல்லாத ஓர் தபால் இலாகா தொழிலாளர், இதே வேலைக்கு ஓர் வெள்ளைத் தொழிலாளர் பெறும் உயர் ஊதியத்தைப் பெற வேலை நிறுத்த இயக்கத்தைக் கையாண்டால் இச்செயல் நாசகாரிய குற்றமாகும். ஆதாரமற்ற நாசகாரிய குற்றச்சாட்டுகளை நீதி மன்றத்தில் எதிர்க்க செயல் ஸ்தாபனம் பண உதவி அளிக்க முன் வந்தால் அது பலாத்காரப் புரட்சியை நாட்டில் நிலைநாட்ட அடிகோலிய குற்றத்திற்குள்ளாகும். இப்பொழுது நடைபெறும் ஃபிஷரின் வழக்கு விசாரணையின் முடிவை உலக நாடுகள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன.

——

***திண்டிவனம் டி. மு. கோ.***

S. C. 268/66

செஞ்சி, சூசை ஆசிரியர் —வாதி

சென்னை, செனுய்நகர், சின்னம்மாள் —பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி எழுதிக் கொடுத்த பிராமிசரி நோட்டின் பேரில் செய்த தாவா 28-4-66-ல் ஈரங்கி. அன்று காலை கோர்ட்டில் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு செய்யப்படும்.

கே. பாண்டுரங்கன்

1/7020/7 அட்வகேட்

---

## மன்னர்குடி பிரஸ் லிமிடெட்,

***ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: 123, மகாத்மாகாந்தி ரோடு, மன்னர்குடி***

# அறிவிப்பு.

1956-ம் வருடத்து இந்தியன் கம்பெனீஸ் ஆக்ட்படி இப்பொழுது மானேஜிங் டைரக்டராக இருந்துவரும் ஸ்ரீ. M. K. N. கணேசபிள்ளை அவர்களை, மறு மூன்று வருடங்களுக்கு மானேஜிங் டைரக்டராக அங்கீகாரம் செய்ய இந்தியா கவர்ன்மெண்ட்டு சென்ட்ரல் போர்டுக்கு அங்கீகாரம் செய்ய விண்ணப்பம் அனுப்பியிருக்கிறது.

மன்னர்குடி }
19—4—66 }

**M. K. N. கணேசபிள்ளை,**
மானேஜிங் டைரக்டர்.

---

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

பயங்கரமாக இருந்தாலும் மற்றொரு விதத்தில் இந்த உலகில் நான் ஒரேயொருவன் தனியாகப் பாதயாத்திரை செய்யும் மகிழ்ச்சியும் தோன்றிற்று – ஒரு கட்டத்தில் எனக்குமிகவும் அருகாமையில் பயங்கரமாக ‘கோரஸ்’ பாடி ஊளையிட்ட அரசியல் வாதிகளைப் (குள்ள நரிகளை) பயமுறுத்த என் கைவசமிருந்த மெழுகு வர்த்தியையும் ஏற்றினேன்.

கடலுக்குமேல் திரையமைத்து வண்ண ஒளி வீசி — அனுமன் விரும்பிய செம் பழமாக உதித்த பரிதியைக் கண்ட காட்சி அற்புதம்– எல்லோரும் சகஜமாக ஏறிப் பார்க்கலாம் என்று சொன்ன ‘லைட்ஹவுஸ்’ மீது ஏற அனுமதியில்லை என்ற ஊழியர்களின் நேர்மையை மதித்து தெற்கு வடக்காக இருக்கும் கடல் கிழக்கு மேற்காக மாறிக் காட்சிதரும் பகுதி வரையில் நான் தனியாகவே நடந்து சென்றதும் கடைசியில் கிளிஞ்சல் பொறுக்கும் மீனவ அன்னையொருத்தியின் உதவியால் ஊருக்குள் வந்து சேர்ந்ததும் குறிப்பிடத்தக்கவை- மான்கள் தாமாகவே கூடிக் கூடி வாழும் பகுதிக்கு யான் வளர்க்கும் காடு என்பதை விட மான் வளரும் காடு என்கிற பெயரே பொருந்தும் – திரைப் படங்களில் அண்மைக் காட்சியில் நடிக்கவேண்டிய அவை துள்ளித் தாவியோடும் அழகு அற்புதம்!

பகலில் பொதுப்பணித் துறையைச் சேர்ந்தகடலில் சேதுசமுத்திரத்திட்டத்தையொட்டிய ஆராய்ச்சிப் பிரிவுக்கு வகை செய்யும் பணியிலீடுபட்டுள்ள திருதவலிங்கம் அவர்கள் உதவியால் ஒரு தமிழர் வீட்டில் தேநீர் அருந்தி சைக்கிளில் கோடிக்காடு குமரன் கோயில் – கடற்கரையில் இடம் மாறி மாறியமைந்துள்ள நவகோடி சித்தர் ஆலயம் – கீற்றுக் கொட்டகை – ஆகியவை கண்டு திரும்பினேன். கோடிக்கரையையடுத்த சின்னஞ்சிறு தீவுகளுக்கு விசைப் படகு விட்டும் — கோடிக்கரையை விருந்திலமர்ந்த கடைசி நபராக்கிவிடாமல் கவனித்தால் அதனல் நம் நாடு முன்னேற வழியுண்டு- இந்தப் பகுதி மக்களும் நம் தலைவர்களிடம் நல்லுணர்ச்சிகொள்வர் – சொல்லாமல் கட்டுரையை எப்படி முடிப்பது? கதர்கட்டிய என்னை இப்பகுதி மக்கள் கட்சி அரசியல் வாதியாகவே கருதினர்கள் — நான் எல்லோருக்கும் பொதுவான ஆசிரியன் என்பதை விளக்கி விடைபெற்றேன்- ஆமாம் – பசியோடுதான் – திருத்துறைப் பூண்டியில் மாலை 4 மணிக்கே என் உண்ணும் விரதத்தை துவக்கமுடிந்தது!

——

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

தென்கலை, அருட்பா—மருட்பா, கத்தோலிக்கம்—பிராடெஸ்டன்டு, ஈனயானம்—மகாயானம், திகம்பரர்—சுவேதாம்பரர், சன்னி—ஷியா போன்று ஒவ்வொரு சமயத்துள்ளும் உழக்கில் கிழக்குமேற்கு போல வேற்றுமைச் சுவர்கள்! பகைவனிடமும் அன்பு செலுத்துவதான அருளே உருவான ஆண்டவனின் அடிமைகள் எனப்படுவோர்க்கு இடையில் பூசலும் போரும் காழ்ப்பும் எத்தனை! எத்தனை! அரசியல் சமுதாய அமைப்பில் சமத்துவம் பேசப்பட்டாலும் உள்ளத்தால் சாதி சமயச் சழக்குகளில் மூழ்கித் திணறுகிறார்கள். சாதி என்ற சொல்லே தொன்னூலில் தமிழில் இல்லை என்று அறிஞர் கூறுவர், 'இல்லாததற்கு இல்லை பெயர்' என்று பழமொழி நானூறு கூறுவது போல அந்நாட் சமூகத்தில் சாதிகள் இல்லாததால்தான் அச் சொல்லும் வழங்கவில்லை. அவ்வாறே 'மதம்' என்னும் சொல்லும். மதம் சமயத்தினைக் குறித்தாலும் 'வெறி, திமிர்' என்னும் பொருளும் படுவதுபோல மதவாதிகட்குத் தம்மதமே தலைசிறந்தது என்ற மதமே பிடித்துவிடுகின்றது. இத்தகைய சாதி மதப்புரைகள் தமிழ்ச் சமூகத்தில் ஓடக்கூடாது. 'தமிழர் என்றோர் இனமுண்டு' என்ற அளவில் பிரஞ்சுக்காரர், ஜெர்மனியர், ஆங்கிலேயர்' என்போர்க்கு இணையாகத் தலைநிமிர்தல் வேண்டும்.

தமிழரின் மறுமலர்ச்சித் தலைவர்கள் தம்மவர்க்கு இரங்கி, நம்மினம் பற்றி உள்ளவாறு உணரத் 'தமிழர் நெல்லிக்காய் மூட்டைகள்' என்று புனைந்து புகன்றனர். நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்துக் கொட்டினால் காய்கள் மூலைக்கு மூலை உருண்டோடும். அதைப் போலவே தமிழர் சாதி, மதம், கட்சி முதலிய பற்பல மூலைகள் நோக்கி ஓடிப் பிரிகின்றனர். 'தமிழ்—தமிழ் இனம்—தமிழ் நாடு' போன்ற பொதுச் சிக்கல்களை விடுவிக்கவேண்டிய பொழுதும் தமிழர் என்ற உணர்வுடன் சேர்ந்து தலை கொடுப்பதில்லை. பிரிவு மூலைகளின் உணர்வுகள் மேலோங்க, ஒற்றுமை முனைக் கூறுகள் அடங்கிவிடுகின்றன. இது இயற்கைக்கு மாறானது. பொதுச் செயல்கள் வரும்போது, நெல்லிக்காய் மூட்டையாக இருப்பதை விட்டு இனிப் புளி மூட்டை ஆகவேண்டும். ஆம்! புளி ஒன்றோடு ஒன்று ஒட்டி ஒரே மூட்டை ஆவது போலத் தமிழர் எல்லாம் ஒன்றுபடுதல் வேண்டும். வள்ளுவரும்,

'பல்குழுவும் பாழ் செய்யும்
உட்பகையும் வேந்தலைக்கும்
கொல் குறும்பும் இல்லது நாடு'

என்றாற் போலப் பிரித்து வைக்கும் பல கட்சிகளும் நம்மை நாமே வீழ்த்திக் கொள்ளும் உட்பகையும், ஆட்சியையே அலைக்கழிக்கின்ற சூழ்ச்சிக் குறும்புகளும் இல்லாததே நன்னாடு. அத்தகைய பொன்னாடாக 'ஒன்று பட்டால் உண்டு வாழ்வே' என்று மக்களெல்லாம் ஒத்த நோக்குடன் உழைக்கவேண்டும்.

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது தமிழரின் வாழ்க்கை நிலை உணர்த்தும் ஓர் இலக்கிய ஓவியம். தலைவன் தலைவியைப் பிரிவது கல்விக்காகவும் வாணிபத்துக்காகவும் என்று சங்க நூல்கள் சாற்றுகின்றன. கடாரம் கொண்டதைச் சோழர் வரலாறு உரைக்கின்றது. மலேயாவில் மலாக்காவும், இந்தோனேசிய தாய்லாந்து ஊர்களும் தமிழ்ப் பண்பாடு விளங்கிய சின்னங்களைக்கொண்டு விளங்குகின்றன. கோலாலம்பூர் உலகத்தமிழ் மாநாட்டுப் பொருட்காட்சிக்கு நியூசிலாந்திலிருந்து வந்த கோவில் மணி போன்ற பெரிய மணியில் சோழன் படையெடுத்த ஆண்டு பொறிக்கப்பட்டுள்ளது. அத்துடன் கண்டெடுக்கப்பட்ட நாணயங்கள் சோழர் கால நாணயங்கள். யவனர் நாணயங்கள் தமிழகத்தில் புதையுண்டிருந்தன. தமிழகத்திலிருந்து வந்ததாக முத்தும் மயிலும் பற்றிக் கிரேக்க நூல்களும் மார்க்கோபோலோ போன்ற பயணிகளின் குறிப்புக்களும் கூறுகின்றன. அண்மைக் காலத்தில் மலேயாவிலும், இலங்கையிலும், தென் ஆப்பிரிக்காவிலும், பர்மாவிலும் காடு திருத்தி நாடு வளர்த்ததை அறிகிறோம். இவை யாவும் தமிழர் உலகின் பல பகுதிகளுக்கும் சென்று வாகை சூடிய வாழ்க்கையையே உலகுக்குக் காட்டுகின்றன.

ஆனால் மேலை நாட்டு வெள்ளையர் அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவில் சென்று சேர்ந்து நாடு தமதாகவே ஆக்கிக்கொண்டது போலத் தமிழர் செய்தனரோ, என்றால் பதில் சொல்லாமல் இருப்பதே நல்லதாக இருக்கும். அவர்கள் சென்று அவ்வந் நாட்டினராகவே ஆகிவிட்டனர். ஆனால் நம்மவரோ பலநூறு கல் கடந்து சென்று பல ஆண்டுகள் தங்குவதானாலும் குடும்பத்தைத் தாயகத்திலேயே வைத்து வருவதும் போவதுமான வேரூன்றாத வாழ்வே வாழ்கின்றனர். அதனை விட்டு அவ்வந் நாட்டிலே வேரூன்றியிருந்தால், தமிழினத்தின் பசுங்கொடி பல நாடுகளில் படர்ந்திருக்கும். சில மணி நேரத்தில் உலகின் எந்த மூலைக்கும் செல்லக்கூடிய இந்நாளில் இனியேனும் தமிழர் வாழ்விடத்தில் ஆழ்ந்த வேரூன்றி வளரவேண்டும். 'பகலோன் மறையா வண்ணம் பரந்தது எங்கள் பேரரசு' என்று ஆங்கிலேயர் மார்தட்டிக் கூறியதுபோலத் தமிழ்கூறு நல்லுலகின் எல்லையை விரிவடையச் செய்தல் வேண்டும். அவ்வுலகின் பல பகுதிகளில் இருந்

தும் தமிழன்னைக்கு மணியாரங்கள் செய்து சூட்டுதல் வேண்டும்.

‘உள்ளம் ஒரு கடல்’ அதில் எண்ணங்களாகிய மீன்கள் ஏராளமாய் உள்ளன. அவற்றை வெளியே கொண்டுவரப் பயன்படும் தூண்டில் போன்றதே மொழியாகும்’ என்று ஆங்கில மொழியியல் அறிஞர்கள் செப்புகின்றனர். தூண்டிலில் மீன் விரும்புகிற, மீனின் உடலுடன் உடலாகக் கலந்துவிடுகிற உணவுப் பொருளைத் தூண்டிலில் வைத்தே மீன்களைப் பிடிக்கின்றனர். அதுபோலவே உள்ளத்துள் உணர்வாக ஒன்றிவிட்ட மொழியினாலேயே உயர்ந்த எண்ணங்களை வெளிக்கொணர இயலும் என்பது ஒருதலை. ஜெர்மானிய நாட்டில் சென்றவர்கள் அங்கே ஆங்கிலம் பேசுவோரைக் காண்பது அரிதாம். எங்கும்-தொழிற்சாலைகளிலும் வெளியிலும் ஜெர்மன்மொழியே பேசுகின்றனர். ஜப்பானிலும் அப்படியே. இவ்வுண்மையை அங்கு சென்று மீண்ட அமைச்சர் சி. சுப்பிரமணியம் கூறியுள்ளார்.

தம் செய்பொருள்களை உலகோர் காணவும், உலகச் சந்தையில் தம் பொருள்களின் விற்பனை வாய்ப்புக்களை வளர்க்கவும் பற்பல பொருள்களின் மாதிரிகளையும் கப்பலில் வைத்து உலகின் பல துறைமுகங்களில் நிறுத்திக் காட்டுகின்றனர். அவ்வாறு ஆக் கப்பல் சென்னை வந்தபோது கப்பலில் இருந்த ஜப்பானியர்கள் அரைகுறை ஆங்கிலமே பேசினர். சென்னையில் ஜப்பானியத் தூதரகத்தில் கப்பலுக்கு நுழைவுச் சீட்டு வழங்கிய ஜப்பானிய ஊழியர்களிடம் பேசிய போதும், ‘தீர்ந்தது’ ‘முடிந்தது’ (Over, finished) போன்ற சில சொற்களையே ஆங்கிலத்திற் பேசினர்.

ஆனால் ஜெர்மானியரோ அன்றி ஜப்பானியரோ தொழிலில் ஈடு இணையின்றி உயர்ந்தோர் என்பது முல்லைக்கு விளம்பரம் செய்வதைப் போலாகும். இத்தகைய உயர்வுக்குக் காரணம் அவர்கள் அறிவியல் உயர்வுகளைப் பிற மொழிகளில் தேடிச் செல்லாமல் தாமே வளர்த்துக்கொண்டு தம் மொழிகளிலும் அறிவியலை வளர்த்ததேயாகும். பிறமொழிக்கு மதிப்புத்தராமல் அறிவுக்கே இடம் தந்தார்கள்.

ஆனால், தமிழகத்தைத் திரும்பிப் பார்ப்போம். தமிழில் வந்த பெயர்ப்பலகைகளையும் மீண்டும் ஆங்கிலத்தில் பெயர் மாற்றுகிறோம். சிங்கப்பூரில் அரசினர் பெயர்ப்பலகைகள் அங்கு வழங்கும் நான்கு மொழிகளிலும் விளங்குகின்றன. தொழிற்சாலைகளிலும், கல்விக் கூடங்களிலும் நோக்கினால் ஆங்கிலமே ஒலி செய்கின்றது. இது செயற்கை. அதனால்தான் அறிவு வளர்ச்சியில்லை, தொழில் வளர்ச்சியில்லை. பிறமொழி ஆதிக்கத்தில் அக்கறை செலுத்துவதால், வளர வேண்டிய வளர்ச்சிகள் நிறைவாறு சுமைகள் மிதக்கின்றன. அதனால் உள்ளத்தின் உணர்வுகள் தாய்மொழித் தூண்டிலால் வெளிக்கொணர்தல் கைகூடுவதில்லை. ஆதலால் புதுத்துறைகள் பூப்பதில்லை. எனவே உலகை நாம் எதிர்பார்க்கிறோம். நம்மை எதிர்பார்க்கும் நிலையில் நாமில்லை. தமிழில் தந்திமுறை அமைத்தார், ஒரு தமிழர். ஆனால் அரசியல் ஆதரவில்லை. முளையிலேயே முன்னேற்ற வழி கருகுகிறது. இவையெல்லாம் நாம் அன்னியரின் அடிமைத்தளையில் - மோகத்தில் இருந்து விடுபடவில்லை என்பதே காட்டுகின்றன. தன்மான விடுதலைக் குடிகளாக விளங்க இத்தகைய அடிமைத்தளைகளிலிருந்தும் ‘இல்லை, யில்லை’ என்ற இன்மைகளிலிருந்தும் விடுபடல் வேண்டும்.

சுருங்கச் சொல்லவேண்டுமானால், இடையில் புகுந்த மூடப்பழக்கங்களை விட்டு, உலகோர் பாராட்டும் வகையில் முழுமூச்சுடன் தேனீக்கள் போலக் கூடி உழைத்தல் வேண்டும்; தமிழினம் தலைநிமிர்ந்த இனமாதல் வேண்டும். அதனை உலகின் பிற இனங்கள் ஏறிட்டுப் பின்பற்ற நோக்குதல் வேண்டும்.

—



டில்லியில்

## பரத நாட்டியம்

டில்லி நாட்டிய கலாலய மாணவி குமாரி எஸ். அகிலாண்டேஸ்வரியின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் டில்லி தலைமைக் கமிஷனர் எஸ். என். ஜா, ஐ. சி. எஸ். தலைமையில் சாப்ரு மாளிகையில் மிகச் சிறப்பாக நடந்தது. அரங்கேற்ற விழாவுக்கு உணவு விவசாய அமைச்சர் சி. சுப்ரமணியமும் பல பாராளுமன்ற உறுப்பினர்களும் இங்குள்ள தூதுவர் அலுவலகங்களைச் சேர்ந்த பல வெளிநாட்டவர்களும் மற்றும் பெருந்திரளான டில்லிப் பிரமுகர்களும் வந்திருந்தார்கள். சாஸ்திரீய முறை தவறாமல் சுமார் 2½ மணி நேரம் யாவரும் அதிசயிக்கும்படி நாட்டியமாடிய குமாரி அகிலாண்டேஸ்வரியின் திறமையை தலைமைக் கமிஷனர் ஜா ‘அதி அற்புதம்’ என்ற ஒரே வார்த்தையால் சுருக்கமாக வர்ணித்ததை கூட்டத்தினர் கரகோஷம் செய்து ஆமோதித்தனர். ‘நாட்டிய ரத்தினம்’ என்ற பட்டம் நாட்டிய கலாலயத்தின் சார்பில் குமாரி அகிலாண்டேஸ்வரிக்கு வழங்கப்பட்டது. இந்த அரங்கேற்றத்துக்கு தஞ்சாவூர் ஜி. மகாலிங்கம் வாய்ப்பாட்டும், எம். நாகராஜன் மிருதங்கமும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

---

அரியலூர் டி. மு. கோ.

S. C. 56/66

வீரப்ப படையாச்சி —வாதி

அப்பாதுரை படையாச்சி,
அண்ணாமலை படையாச்சி
—பிரதிவாதிகள்

வாதிக்கு முதல் பிரதிவாதி 7-8-64-ல் ரூ. 250-க்கு எழுதிக் கொடுத்த புரோநோட்டின் பேரில் பிரதிவாதிகளால் ரூ. 271-20 கிடைக்க செய்த தாவா 2-6-66-ல் ஈரங்கி.

2/7021/8 N. மணி
அட்வகேட்

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy : Twelve Paise.